ஓம்.

தத் ஸத்.

ஸ்ரீ

விலக்ஷணாநந்த ஸ்வாமிகள்

அருளிச்செய்த

# வேதசாரம்.

இஃது

பாலக்காடு

வித்தியாசந்தானம்

அச்சுயந்திர சாலையிற்

பதிப்பிக்கப்பட்டது.

1918.

ஓம்,

தத். ஸத்,

ஸ்ரீ

விலக்ஷணானந்தஸ்வாமிகள்

அருளிச்செய்த

# வேதசாரம்.



இஃது

பாலக்காடு

வித்தியாசந்தானம்

அச்சுயந்திர சாலையிற்

பதிப்பிக்கப்பட்டது

1917.

ஓம்.

தத் ஸத்.

# வேதசாரம்.



வேதசாரத்தின் விரிவினைவிரிக்க
வேதனையுன்னி விளம்புதுமியாமே.

அத்திமாமுகனை முத்தியினுருவாம்
அகவறிவறிவா ரான்றவராகும்
அங்கமாய்ந்தாலு மறிபொருளதுவாம்
அங்கமுமாய வறுபதாண்டாகும்
அங்குறவிங்கும் இங்குறவங்கும்
அங்கிருந்திங்கே யறிவுறலறிவு
அத்தையேயெண்ணி யாகுதல்விசாரம்
அந்தணரறிவா ராவருமறியார்
அந்தமுமின்றி முந்துவதழகு

அருவமா நிட்டை யாகுதலருமை
அலம்பகையோக மலந்தருமாகா
அவத்தைகளைந்து மதற்கிலையாகும்
அவரவரகமே யவரவர்சென்மம்
அறவறவானா லறிவுறுமறிவு
அறிவிடையறிவு யாததல்சமாதி
அறிவதுகண்டு மறிவுறல்போகம்
அறுபதுநாலு மடக்குதல்கும்பகம்
அற்பமாயுலகை யாக்கினாலின்பம்
அனைத்துளந்தாண்டி நினைப்பறனிட்டை
அன்புறவதுவா மன்பிலியானால் (20)
ஆகமரெல்லா மேகனையறியார்
ஆசைகணீங்கா ரறிவிலியாவர்
ஆசைகளற்றும் பேசுவதுண்டு
ஆண்டவனடிமை யாண்டிடவாகும்

ஆதரவானா லோதுவதில்லை
ஆதியிலாசா னையுருவானான்
ஆதியிலுலக மங்கிருந்தான
ஆதியுமில்லை நீதியுமில்லை
ஆத்துமஞான மன்பருக்காகும்
ஆந்தரவுலக மேந்தியதுண்மை (30)
ஆரணமெல்லா மையுறவாகும்
ஆராதார மாவதுமில்லை
ஆருருவானா லோருருவாகும்
ஆலமரீச னேனுதலெண்ணு
இகபரமில்லா ரகமுடனாவர்
இக்குணமூன்றிற் கிருப்பிடமுள்ளம்
இங்குறவாவ தங்குறவாகும்
இச்சைகளின்றி யச்சுதமெண்ணு
இனமனதொன்று யினமுறலியமம்

ஈசனுநாமு மீருருவாகும்
ஈசனுக்காளென் றெண்ணுதலினிமை
ஈசனையெண்ணி யிசைவது பத்தி
ஈரறமொன்றே யாருவதாகும்
ஈருடருண்ட வேறுவதுண்மை
ஈவதுதன்னை யாவதுமேலோர்
ஈன்றவளாலே யீறுறுமாயை
உட்குருவெளிக்குரு வுண்டெனலொக்கும்
உட்சமாதியிலே யுள்ளதூசத்தம்
உண்ணிலையுற்றோ ரெண்ணுவதில்லை
உண்ணுக்தள்ளே யண்ணுக்காகும்
உருவமூர்த்தியுரே யருவமதாகும்
உல்குணர்வறவே யுலமறுமங்கு
உலகமுந்தோற்ற வுள்ளுணர்வாகும்
உள்ளுவதுள்ளே யள்ளியதாகும்

உற்றகமுற்று லுற்றிடுந்துறவு
ஊகமில்லார்க்கு முண்ணிலைவாரா
ஊடுறுஞான முத்தமர்க்காகும்
ஊமையினிலைமை யாமையதாகும்
ஊழியுமூழி யுற்றிடலுள்ளம்
ஊனறவெண்ண வானதுவாகும் (60)
ஊன்றுதலெல்லா முள்ளிடமாகும்
எங்குமில்லாத வங்கமுற்றிடுவாய்
எங்குறவுள்ள மங்குறவேகன்
எங்குஞ்சலித்து மேகதலுடைமை
எச்சமயத்து ளிருப்பதுமேகம்
எட்டுடனெட்டு மெட்டுமுட்பிரிவு
எண்ணறுமாறு லிங்குறுமேகம்
எத்தடைவந்து முத்திமினோடும்
எப்பொழுதாகு மப்பொழுதைந்து

எல்லாமொழிந்த தேமெனப்பகர்வர்
ஏகமாய்நின்ற தேந்திழையண்மை
ஏகுதல்வருத லெல்லாமறிவு
ஏதமிலின்ப மாதரவாகும்
ஏதனமுற்று மெண்ணிடவோடா
ஏறுதலுண்டே லிறங்குதலுண்டு
ஏனையவெல்லா மானினமாகும்
ஐங்கோசந்தாண் டப்புறமான்மா
ஐம்புலனுற்ற மெய்யுறவாகும்
ஐபகமாற்றி யுய்விடமுள்ளு
ஐயுறவெல்லா மைம்புலச்சேட்டை
ஐவகைத்தோற்ற மைவகையறிவு
ஐவருமேக வையிடமாகும்
ஒருகண்மூட வொட்டுவதோடும்
ஒருவருமில்லை ஒருவருமுண்டு

ஒவ்வொருமதத்தி னவ்வுருவொன்று
ஒன்றகங்கொள்ளா துட்டாமதமே
ஒன்றதுநிற்க வொன்றிடுமொன்று
ஒன்றினுமில்லா வோரகமொன்றும்
ஒன்றுறுமானு லொன்றியதோடும்
ஒன்றுறவெண்ணி யுற்றிடல்சுபேச்சை(90)
ஒன்றிலும்பற்று தோர்நிலையாறு
ஒகுசெய்தப்பா லாகிடல்ஞானம்
ஓங்காரத்தி னுள்ளொளியோகம்
ஓசையுமற்ற வாசையுமுண்டு
ஓதுவதெல்லா மோதிலியுணர
ஓயாதுள்ளே யாயாதறிவர்
ஓரமில்லாத வோரகமுன்னு
ஓருருவொன்றே வொன்பதுதானும்
ஔவுருவானு லஃதறிவாகும்

ஔவுதலெல்லா மௌவியதாகா
  ககனமுமைந்தாக் காணுவதாகும்
கக்கசமிக்கக் கண்டதுகாணும்
கஞ்சுகரெல்லாங் கண்டவரில்லை
கசலையுங்கூடாக் கரியதுவாகும்
கச்சமுங்கண்டாற் காரியமாகும்
கடமதுநீந்திக் கடவுவரேகம்
கடமையென்றேதுங் கரியதுதள்ள
கடவதுதன்னைக் கண்டிடங்காட்ட
கடவுளரெல்லாங் கடவுறவாகும்
கடமணமுற்றுக் காணுதல்சாந்தி
கடிகையினுள்ளே வடியவராகும்
கண்டவரெல்லாங் கண்டிலரென்பேன்
கண்ணினுற்கண்ட கண்ணிலையல்ல
கயலமுங்கொப்புட் கண்டுதேனூறும்

கம்முருவாகிச் செம்முதல்முத்தி
கவ்வதுகாணுங் காணிலாதொன்று
கனைகடலுலகங் காண்பதுமில்லை
கன்றுதலெல்லா மன்றிலதாகும்
காசினிகண்ணுக் கண்ணுறக்காணும்
காசினிகொள்ளுங் கண்டதைக்கண்டால் ()
காட்டமுண்டாளுற் றேட்டமுமில்லை
காரணமுற்றுற் றேருவதில்லை
காரணமாயை காரிகையாகும்
காரிகையின்பங் கண்டவர்பற்ருர்
காரிருள்மூட வாதலின்று
காலிலியாளுற் காக்ஷியுமோடும்
கிஞ்சுகமொழியார் கிட்டுறவாகா
கிட்டினுலோடுங்கேட்டானிற்கும்
கிட்டுறவெல்லா மொட்டுவதெண்ணு

கிளருவதங்கே யுளமறவாகும்
கிழமனதோடக் கீழகமோடா
  கீசமுண்டாக நேசமுண்டாகும்
கீதையெட்டெட்டும் பாதைகளாகும்
கீர்த்தியுமுள்ளுங் கேட்டவர்கெட்டார்
கீழறுஞான மேழுறவாகும்
கீழ்மேலெண்ணார் கேடறுஞானர்
  குண்டலியோகங் கொண்டவர்கொள்வார்
குவலயமுள்ள தவயவமில்லை
குவிமனதுடனே யவிதறுயோகம்
குறிநிலையில்லாக் கொள்கையேஞானம்
குற்றமுண்டானாற் குணமுமுண்டாகும்
  கூசறநிற்போர் வேசரியாவர்
கூடியகூடுங் கேடுளதாகும்
கூடுதலெல்லா பேடணையாதம்

கூட்டமின்ஞானங் குஞ்சரமொடும்
கூரியதோரக் காரியமாகும்
 கெடியுறவான முடிவதுமுண்மை
கெடுதலையெண்ணக் கெடுதலுமாகும்
கெட்டவரெல்லாங் கேடிலியாவர்
கெதியதுகாண விதியதுவோடும் (150)
கெல்லுரலெல்லா மல்லவர்செய்கை
கெழுமுறுமாறு லுளவதுமல்ல
 கேடறுஞானங் கிட்டிடுலேகும்
கேடுறுமாயி ளேடுறுமுண்மை
கேட்டவரெல்லாங் கேவலமாவார்
கேவலமுற்றுற் கேவலமாகும்
கேள்வியுமுற்ற வேள்வியுமாகும்
 கைமாறின்றிச் செய்தாலுண்மை
கையறுமாஞற் காலறுமாகும்

கைலையங்கிரிவாட் கண்ணனேகத்தன்
கொடியதுபோல நெடிதுறுமுள்ளம்
கொதியுளமாறக் கதியதுகாணும்
கொய்யாமரமே பெய்யாமெண்ணு
கொன்றாற்பின்னுங் கோருதலுண்டு
கோசமுமோட நேசமுமுண்டு
கோதறுமுள்ளஞ் சேதனமாகும்
கோத்திரமெங்குங் கொண்டார்கொள்ளார்
கோமணமொன்றே குறியுளதெண்ணு
கோருவதெல்லா நேருவதுண்மை
கௌசனையொன்றே கண்டிடவாகும்
கௌதுகமானாற் கண்டிலரம்மா
கௌரியுமாட்டிக் காணுறக்காணும்
கௌவையுற்றானாற் கதியிடமல்ல
சங்கினவோசை சார்வதுசாரம்

சடமெலாந்தள்ளிச் சாறுவசாந்தம்
சத்துவமுற்ருற் சார்ந்திடுஞ்சகசம்
சத்துவமென்பது சத்துருவாதல்
சத்துவமுற்ரு லுத்திகளுண்டாம்
சத்துவாபத்தியே தன்னிடத்தங்கல்
சமாதியிலுள்ளஞ் சத்து வமாகும் (180)
சமாதியுளுற்றச் சாருவதைந்தடை
சற்குருவில்லை சாதகனில்லை
சாக்கிரமூன்றுஞ் சாற்றுவரில்லை
சாங்கியசமய மோங்கியபுருடன்
சாதியுஞ்சாதி பேதமுஞ்சாரார்
சாதியுமில்லை சாந்தமுமில்லை
சாம்பவிசாருஞ் சத்துவந்தளரும்
சித்துருவான சத்துளரில்லை
சித்தியினிச்சை முத்தருக்கில்லை

சித்திகளுற்றாற் சேருறுமுத்தி
சித்துடன்சேரச் சித்துருவாவர்
சித்துதைவேறாச் செப்புவர்சிதடர்
சிருகலுமனது சேர்தலுஞ்சித்து
சிற்சுபாவத்தாற் செகமெலாஞ்சித்து
சீமானேனுஞ் சாமாரில்லை
சீருறவாகுங் காருறவோடும்
சீர்பதியெங்குஞ் சார்புறுமுள்ளம்
சீலனமுற்றோர் சீவனையெண்ணார்
சீவனுமில்லை சேர்வதுமில்லை
சுவரணையில்லாச் சொக்கலேசோகம்
சுவாதிட்டானஞ் சொல்லுவரில்லை
சுவாதீனத்தாற் சோதனமாகும்
சுவையைந்தாலே பவையறியாது
சுழியுறவான வழியதுநாடு

சூக்குமமானாற் சாக்கிரமாகும்
சூசனையாலே வாசனையோடும்
சூதாலுள்ளிச் சூதுறவேண்டும்
சூதினாற்சூதைச் சுற்றுறவேண்டும்
சூனியவாதஞ் சொல்லிடலாகும்
செங்கண்மாறேடுஞ் சேதனமொன்று
செங்கதிராகு மங்கமுந்தள்ளு
செந்துகிலுற்றாற் சேராதுணர்பு
செப்பமுண்டாக்கிச் சேர்வதுசீலம்
செப்புதலெங்ஙன் சப்பிலாவறிவை
செம்மையுமாற்றிச் சேர்வதுதீரம்
சேகரமானாற் சேவையுமாகும்
சேட்டைகளற்றா லாட்டகமில்லை
சேத்திரமீது சேத்திரிசீவன்
சேயுறும்போது வாயுஞ்சுருங்கிடும்

சேருதலென்று லொருதலன்று
சேர்புநாலுற்று வார்தலுமல்ல
 சைசவமாற ஷப்வகையில்லை
சைதன்னியத்தின் சாற்புறவெல்லாம்
சையமேலேறிச் சைவமுமுன்னு
சையுறுமுலகஞ் சார்வதுமில்லை
 சொச்சொரூபத்திற் சொக்கலேதியானம்
சொருகுதலெல்லாஞ் சூத்திரமாகும்
சொல்லறநிற்கு மெல்லொளிதுரியம்
சொல்லுறவாகுஞ் சில்லரைஞானம் (230)
சொல்லுவர்சொன்னற் சொக்கலுமாகா
சொற்பலசொல்லி யுற்பவமுற்றார்
 சோகமுற்றலுஞ் சோதியைநாடு
சோகந்தாண்ட வேகஞ்சொக்கும்
ஸோஹம்பதமே சூசனமாகும்

சோடசகலையைச் சுற்றிடல்சுத்தம்
சோதியுமங்கு தோற்றிடுமல்ல
சோரரேயென்று சொல்லுவரேகர்
சோற்றுலாருங் காற்றலீது
சௌகதனுற்ற சார்பெலாதன்று (240)
சௌவமு நான்கு சாற்றிடுநூல்கள்
ஞாதுருஞேய ஞாயமுமன்று
ஞானமுண்டானால் ஞானமுநழுவும்
ஞானம்பலவா நவிலுவரெல்லாம்
ஞானமுள்ளாலஞ் ஞானமுள்ளீரும்
ஞானியையட்ட ஞானியர்காப்பர்
ஞானுதிக்கங் கண்டவர்ஞானர்
தத்துவஞ்சார நத்துநற்கிரியை
தற்சுகந்தானே யிச்சுகமாகும்
தனக்குறுதன்மை மனத்துறுசெய்கை (250)

தனுமானசியே தனதரிவாதல்
தனையரியார்க்கு மனைதெரியாது
தன்னிடந்தானுய்த் தானுறல்ஞானம்
தன்வசமான துன்வசமாகும்
தன்மனமுள்ளத் தொன்மொழியதாம்
தன்னுற்றன்னைத் தானுறவேண்டும்
தன்னுருவென்ன முன்னுருவாதும்
தன்னுணர்வுள்ளே யென்னுணர்வாகும்
தன்னறிவாலே முன்னறிவென்னு
தாதுறவுள்ளே வோதுவதில்லை (260)
தாபிதமாகத் தன்னுறவாடு
தாமதமாகத் தாமியமாகும்
தாரணையென்புது மோரணையாக்கல்
தானுளதானற் றனியுலகுண்டு
தானுறவானு லானியுமில்லை

தானேதன்னாற் றானுறவாகும்
தான்றோன்றுதலே யான்றோரறிவு
திகமுடன்றேடத் திங்களினாகும்
திங்களொன்றாகு மங்குமிரடக்க
திடமுளதாகு மடமையுமல்ல
திருவருளாற்றா லுருவுடனோடும்
திருடநானல்வ றாநவர்கடேடு
திருபுடியற்றா லுருவதுமில்லை
திரையுறுமதனைத் தேடாதொழிக
தீச்சடமுற்றுத் தேடுவறன்னை
தீதிலியானாற் றீதுறவாகும்
தீபனவெல்லாந் தீயெனவெண்ணு
தீயவனில்லை தீயதுமில்லை
தீயுறமாய்ந்தாற் றிண்மையுண்டாகும்
தீர்வையுமாற வோர்மையுமாறும்

தீவிரமுற்று லியாரவருமறியார்
துச்சிகொண் டேற்றத் துரியமுந்தோனும்
துட்கலுமுண்டாந் தோற்றமுங்காணும்
துத்தலுமில்லை துத்தனுமில்லை
துரியமேதுரியா தீதமென்றெண்ணு
துறவுமுண்டாலுந் துரியமுந்தோன்று
தூக்கமற்றான தொன்னிலையுண்மை
தூங்குதறன்னிற் றூங்குதலாகும்
தூடணமான்றற் றூநிலையேறும்
தூய்துறுமெண்ணந் தோன்றிடவேடும்()
தூலதேராணற் றேன்றிடுந்துணிபு
தெக்கணையென்பது மக்கரமீதல்
தெட்பமின்ஞானந் தேடுறுதாகும்
தெய்வமில்லாம லுய்வதுமில்லை
தெரிதருமுலகங் கரியெனவெண்ணு

தெரிபொருளெல்லாந் தெரிசனமன்று
தெளிவுறுமுண்மை யளிநிகராகும்
தேக்கமுண்டாகுந் தெள்ளியவங்கு
தேசனமுள்ளந் தேட்டுதலாகா
தேசாசாரம் பாசாங்காகும்
தேயமுஞ்சுற்றித் தேடிடவேண்டாம்
தேருடறேரத் தேயசுமுண்டாம்
தேர்விலரெல்லாந் தேடுவறன்னை
தைசத னுண்மை தானுறவாகா
தைத்திரிசாற்றுந் தையலாகாது
தைவிகமுற்று லைவகையாகும்
தைனியடா ணற் றக்கதுதள்ளா
தொகுதிகளெல்லாம் பகுதிகளாகும்
தொக்குடலுள்ளே மொக்குளினுறவேர்
தொங்கிசமானு லுங்கரியாகும்

தொடர்புடனுநந் தூடணமாது
தொட்டால்வாடுங் கொட்டாதுள்ளும்
தொல்லிருளெல்லா மல்லுறவாகும்
தோடமுண்டானற் றெந்தரையாநம்
தோதிலியானற் றுணிவுடனுண்டாம்
தோலுறுப்பாகுந் தூர்தருமாகார்
தோற்றமுண்டானற் றேற்றமுண்டாகா
தோன்றுதலெல்லா மூன்றுத்துரியம்
தெளவுதலெல்லாந் தன்னிடதுள்ளே
தெளவையாயெண்ணித் தாவுதல்கடமை()
நச்சுதலில்லா வச்சுகமாகும்
நடுங்குவதானு லிடும்பலியொன்று
நடுவெளிதள்ள நடுநிலையாகும்
நடுநிலையுற்று நடையுறவேணும்
நடைவழியுற்று லிடைவேளிகாணும்

நட்புறமாஞ் ஞுட்புறமாகும்
நமனுறவாகு நமதறுமானல்
நல்லார்கூட்ட மெல்லாமாகா
நன்றிதுவென்று னன்றிலையாகும்
நாசியினீரார் கேசரிநாடு (330)
நாசியினுச்சி வாசியினேறு
நாடறுஞான மூடுதலாகும்
நாதமுமற்று வேதமுமில்லை
நாதியிலாத வாதியுனமே
நால்வகையோக மால்வகையாகும்
நாற்பதுநாளி லேற்பதுநாடி
நானதுவென்ற ஞானமுமாகும்
நானிலையாஞ் ஞானறவாகும்
நானெனனீக்கி நானென்னல்ஞானம்
நிர்க்குணமறியச் சற்குருவேண்டும் (340)

நிர்க்குணமென்று னிலையதுநேரும்
நிர்ப்பயமுற்று னேருறுநேர்மை
நிர்க்குணயானு னிர்ச்சகமாகும்
நிற்பதுநின்று னேர்வதுநேரும்
நிறைதலுமில்லா வுறைவிடமோரு
நின்மலமாந்தி நிற்குதனேர்மை
நின்மலசிவமே நிர்குணமென்பர்
நின்றிடனிற்க நிற்பதுநேசம்
நின்றிடுமோயி னென்றுறுமோரு
நீக்கலுமில்லை நீதியுமில்லை (350)
நீங்குதலானு லோங்குதலாகும்
நீட்டுதியானு லோட்டுறுமுள்ளம்
நீதியுமில்லை யோதுவதில்லை
நீந்துதியானு லேந்துறுமுண்மை
நீறுடன்பூச வாறுதலாகும்

நீறுறப்பூசி நித்தியம்பூசி
நீற்றகநீற்றி நிற்பதுஞானம்
நீற்றணியண்ண ணித்தியரெண்ணு
நுகருதறன்னி லகமுகமாகும்
நுகையுளமாறு னுண்மையுமாகா
நுண்ணியவுள்ள மண்ணியதாகும் (360)
நுதலிடைமிக்க நூதனமுண்டு
நுவ்வறுனுண்மை நுவ்விலதாகும்
நூதனமலது மாதனமாகும்
நூலறிவாக நுண்ணறிவாகும்
நூலுண்டாயி நூலுண்டாகும்
நூலெதுவாகு நூற்பொருடானே
நூறுதலெண்ண வாறுதலெண்ணும்
நூன்முடிவெல்லா மான்பதியாகும்
நெகிழகமாறு னின்றிடுமறிவு

நெஞ்சறிவுறவே நீணிலமாயும் (375)
நெடுவுலகாளு லடிமையுமாகும்
நெப்பறிவாளு லுப்புறவில்லை
நெளிவுறுமாயி னிற்பதுநிற்கும்
நெறியுறவாக வுரிமையுமாகும்
நெற்றுதலெல்லா னேத்திரமாகும்
நேசமுமின்பு மோசமுமாகும்
நேத்திநுட்ப மாத்திரமுன்னு
நேமமில்லாத நித்தியர்முத்தர்
நேயமுமுற்றா லாயதுமுண்டாம்
நேரிடுமாயி னேருதலின்று (380)
நேராருண்டா லாறாதுள்ளம்
நேர்கடனெல்லா நித்தியமெண்ணு
நேர்படுமுள்ள மார்தருசெல்வம்
நைகரமெல்லா நமதிடமேகும்

நைதலுண்டாயி னமனுளனாகும்
நைபடலில்லை நைபுணமில்லை
நையுளனுடை மெய்யுறவாகும்
நையெனவெண்ண நைதலுமின்று
நொடியினிலுள்ள மடிவுறுமாகும்
நொய்துறுமாதர் நோவிடமாகும் (390)
நொய்யுளமான னேக்கமுண்டாகா
நொவ்வறு நுண்மை நோக்கிடவாகும்
நோக்கமுமைந்து நுண்ணறிவென்பர்
நோட்டமில்லாத வாட்டமுமாகா
நோவுதலெல்லா நூதனமில்லை
நோன்பதுதன்னை நோற்றிடலாகும்
நோன்பிலியோர்க்கு நுண்ணறிவாகா
பங்குறவான லுங்குறையாகும்
பஞ்சமூர்த்திகளும் பார்வையிலொன்று

பஞ்சகோசங்கள் பார்த்தவர்க்கில்லை
பதினாறாகம் பற்றுதல்பூரகம்
பத்துநாலோடு பயிலுதல்சாக்கிரம்
பலபலசொல்வ றாலைவுளரெல்லாம்
பற்பலசமயம் பார்க்கினொன்றாகும்
பற்றறநின்றாற் பற்றிடுமறிவு
பற்றொன்றானாற் றெற்றுண்டாகும்
பன்னீர்தள்ள நன்னீராகும்
  பாக்கியமென்றாற் பற்றறவேண்டும்
பாச்சலுளோர்க்கு வாச்சியமில்லை
பாதியனுற்ற வாதியைநாடு
பாழிடந்தாண்டிப் பதியிடம்பாரு
பாழிடம்பார்த்துப் பதிவுறலாதனம்
  பிஞ்ஞகன்சொன்ன பேரறிவெண்ணு
பிடரியின்மார்க்கந் தொடருவதாகும்

பிரமமேதானென் றெண்ணுதல்பேதம்
பிராணசத்திகளைப் பெற்றிடாதறிவு
பின்புறம்பார்வை பெற்றவர்பேரர்
பீடணமில்லா வேடணமெண்ணு
பீடுதல்பிசகென் றேடுதல்பிசகு
பீதிகைபோல வர்தியராகம் (420)
பீனுதலெல்லா மானுதலொக்கும்
பீவரியுள்ளந் தாவரமாகும்
புண்ணியபாவ மெண்ணிடலாகா
புண்ணியருக்கே யெண்ணுவதாகும்
புத்தகமெல்லாம் பூரணமில்லை
புத்தனைப்போலக் கத்தனுமில்லை
புரிபவையெல்லாங் கரியெனவேகாண்
பூசுவபூசி வாசியையேற்று
பூசைகளெல்லாம் பாசைகளோட

பூமிகளெல்லாந் தாமிதமாகும் (130)
பூரகமென்பது நேருநலுள்ளம்
பூரணநிட்டை பூரணகாலம்
பூரணமென்பது புண்ணியமிகுதி
பூரணமெண்ண வாரணமாகும்
பூரணமென்பது பூமியிலில்லை
பெண்களைவிட்டாற் பேதைமைதீரும்
பெயர்விரிவெல்லா முயர்வுடனாக
பெரியதுமென்னே கரியதுவென்பர்
பெரியவரென்பது முறியவராகும்
பெரிதெனவெண்ண வரிதெனவாகும்(44)
பெற்றவர்பேரார் பெற்றிடம்பேரும்
பேசுவதில்லையே லேசுவதில்லையாம்
பேசுவதெல்லாம் பிஞ்ஞகன்பேச்சு
பேச்சிலியுள்ளம் பேச்சுறவாகும்

பேர்சுறுமாறு லாச்சுதுகேடு
பேதுறுமாறு லாதரவாகும்
பேரகமரிபி னாரகமாகும்
  பையரவாட்ட மெய்யறிவாகும்
பையவுளேற மெய்யறிவேறும்
பைரவியொன்றும் பங்கிலாதாகும் (450)
  பொங்குதலின்றி யங்குறவேறு
பொய்புளமாய மெய்பதுவாகும்
பொறிவசமுள்ள முறிவுடனேடும்
பொறியிடையாறு லுரியதுநேரா
பொறைமிகுதிண்மை யறிவுடனுக்கம்
பொறையுறுமறிவும் போக்கிலியாகும்
  போக்கிலிஞான மாக்குவர்க்காகும்
போதகமெல்லாம் போற்றுவோர்க்கில்லை
போதமாருள்ளம் புரிவதுமில்லை

போதுமென்றெண்ண வேதிலியாகும்(460)
போர்செயுமுள்ளம் பார்வரவெண்ணும்
பௌதிகமெல்லாம் பாமரர்க்கொக்கும்
பௌதிகன்ஞானம் பதிநிலையாகும்
மத்திபமான லத்தினமனிதர்
மத்திமவங்கு மாறலுங்கிரியை
மந்திரமோத லுந்திரமாகும்
மனதொடுமடமை யினமுறல்மூடம்
மனதொருவழியா மாற்றுதலியமம்
மாசகலன்னே ரோசனைமாறும்
மாதவமென்பது மாலறநிற்றல் (470)
மாதுறவான லோதுவதில்லை
மாமனதொன்றி யேமுதல்கனவு
மாயையுமானல் ம்ந்திரமாகும்
மாயையின்றேற்ற மாதரேயென்பர்

மாரணமெட்டு மேறுதலாகா
மாலறநிற்க வோலமிட்டோடும்
யாற்றுரெல்லா மேற்ருலுள்ளும்
மிகைபடுமுலகு நகையுறவெண்ணு
மிசையதிமிசைதல் மெல்லெனவேறும்
மிச்சமுந்தானுய் மீறுதலுண்மை (480)
மிருட்டினுலுள்ள மீறுதலாகும்
மிருதியுமில்லா வருதியுமாகும்
மிளிரொளிமேவக் களியதுவாகும்
மின்மினிதள்ளி மின்னுதலறிவு
மீகண்ணுற்ருல் மேவிடமாகும்
மீட்சியுஞ்செய்த மேற்கருமந்தான்
மீமிசையேறி மீளுதலென்ஞே
மீளியைவென்று மேலுறவெண்ணு
மீறுதலெல்லா மீறுதலாகா

முக்குணந்தள்ளி யக்குணமெண்ணு 496
முதலுறும்போது முன்னவனோக்கம்
முத்திசேர்போது சித்திகள்வந்துறும்
முத்திரைமூன்று முன்னமேசொன்னோம்
முப்பத்திரே முன்னுதல்ரேசகம்
மும்மூர்த்திகளு முன்னவரில்லை
முனைதலுமுற்ற முனையுறவேண்டும்
மூவாதனைகள் முன்னிடுமகற்று
மூன்றினுமுன்னி முந்துறவேண்டும்
மூன்றுடன்கூடி மூடுதல்துவிதம்
மூன்றுறமூன்று மூதறிவாகும் (500)
மூன்றுமற்றாக முத்தியுமாகும்
மெத்தெனவானோன் மெத்துறவாகும்
மெய்யறிவுற்று மெய்யறவெண்ணு
மெய்யகமானால் மெல்லியலாகும்

மெல்லுறவாங்கி யெல்லையினூற்று
மென்றேட்புல்லு மெல்லியலாகா
மேதகமானல் மேலுறவேறும்
மேதயின்கற்ப மேலவருண்பார்
மேலுறவுள்ளோர் மேனியுமின்னும்
மேலுறுமாயை கீழுறவாகும் (510)
மேலுறவுற்றல் மெல்லகமெலியும்
மேற்றலைவாசல் மேலுறவிந்து
யேனகைபோல மேதினிகாணும்
மேனேக்குதலை மேலவர்வீந்து
மைதுனமெட்டு மையுளமாறு
மைத்திரியானல் மற்றையகூடும்
மைந்தனுலுள்ள மகிழுறவாகும்
மையறுமானல் மெய்யுறவாகும்
மையமுண்ணடி யுய்யுவதழகு

மையலுண்டாக்கு மாதரைவிலக்கு (520)
மையுறுமானல் மையினலோடும்
மொக்குளினுள்ள முதல்வனேசீவன்
மொய்யுறவானல் மெய்யுறவில்லை
மொல்லறவெண்ண வில்லதுமாகும்
மொழிபலமுன்னு முன்னுதலுன்னு
மொழியழியுள்ள மழிதலுமெண்ணு
மோகனமுள்ள வேகனையெண்ணு
மோக்கமுமின்றி முடிவதேமுடிவு
மோடிமாருத மூடனுக்கில்லை
மோதகமில்லா ராதரமில்லை (530)
மோதனமில்லா மோதமேமோதம்
மோனமுமின்றி யானதேமுத்தி
மௌவலைந்தாலே மாட்டுதலில்லை
மௌனமுமூற்றல் மாறுவதுண்டாம்

மௌனமுமூன்று மாறுதலெல்லாம்
யதியுளதான யந்திரங்கூடா
யமமெலாந்தன்னை யாதெனவறிதல்
யவ்வனமுற்றால் யாதனையாகும்
யாமுகமெல்லாம் யாமினியாகும்
யுபமுறுயுவனும் யூகியேயாவன் (540)
யுவதியுமென்ப தவதியுமாகும்
யுவனவன்றனே யவமிலாதறிவன்
யூகவானலு மாகுதலறிது
யோக்கியந்தன்னை யோகினலறிதல்
யோனியிலுற்று லானியுண்டாகும்
வகையறியார்க்கு வழிபடுதெய்வம்
வட்டமிட்டிருக்கும் வழியிலைவானம்
வயதிருபதிலே வுபருவஞானம்
வர்முளதான லுருவதுபுண்மை

வருவதுதானே வந்துறவாதும்
வருவனவெல்லா முறிவுடனோடும்
வழியிலையானா லழிதலுமில்லை
வளமனையோக முளவறிதாகும்
வாக்கினாலறியா வாக்கியமில்லை
வாங்காவுலக மேங்காதில்லை
வாசலுமொன்றே வழியடைத்திருக்கும்
வாசியினாலே வாசலொன்றாகும்
வாச்சியந்தள்ளி னாச்சுதுமுத்தி
வாதனைவந்தால் வந்திடுஞ்செனனம்
வாதுரையாடார் வந்தவரெல்லாம்
வாயுவையோட்டி லாயுளுமுண்டாம்
வாயுவையடக்கல் வந்ததைமாற்றல்
வாரிதிசூழும் பாரிடமில்லை
விகற்பத்தோடு வேண்டுதலங்கம்

விடயமுற்றுலே மடமையுமாகும்
விட்டதைவிட்டு நட்டதுமெண்ணு
விண்ணுமாயி னெண்ணுமாகும்
விந்தறிஞான் முந்துதல்யோகம்
விரியகமாறு லரித்துயோகம்
விற்பனராரும் பற்பலராவர் (570)
வீடதுமெல்ல வோடுதலில்லை
வீடுளதாக வேட்டையோடும்
வீடெதுவீடு வீணறவீடே
வீடெனவுள்ளம் வீய்தலுமாகும்
வீயாதுலகு வீயாதுள்ளம்
வீயாவுள்ளம் வீய்ந்திடமுத்தி
வீர்முண்டானல் விந்துமுண்டாகும்
வீரேசுரனென் றெண்ணிடவீடு
வெருமதியுள்ளம் வேசரியாகும்

வெண்குணமானால் வெறுவெளியாகும்
வெளிநிலைதாண்டி விட்டாற்பரிசம்
வெளியிடமாக வெளியதுகாணும்
வெளியுடனேற வுளியதுவேணும்
வெளிகடந்துண்டு விண்ணிடையேயு
வெறிதிருப்பதுவே யரிதெனவாகும்
வெறிதிருந்தாலே வேதனையில்லை
வேண்டுவரின்ப வேண்டுவர் துன்பம்
வேதனமென்றால் விண்ணதுவாதல்
வேதனைமிக்க வந்திடின்வேறும்
வேதப்பலவாய் விளம்புவதெண்ணேல்
வேற்றுருவாகா வாற்றுதலில்லை
வைகரிவந்தால் வந்திடாஞானம்
வைகுதறன்னின் விதநுமுள்ளம்
வைபாடிக்னும் வந்துறவாவன்

'வைபோதத்தோ வந்திடுவார்கள்
வையகமென்ட வையகமாகும்
வைரவியென்பது வ்கையறிந்துய்வ
வைராகங்கொள் வருவதுவந்தும் — (598)









வித்தியாசந்தானம் பிரஸ், பாலக்காடு. 20—5—1918